AL/2019/46/T-I (OLD)



පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

හින්දු ශිෂ්ටාචාරය I
இந்து நாகரிகம் I
Hindu Civilization I

46 T I

05.08.2019 / 0830 – 1030

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

1. இருக்கு வேதத்தில் அதிகமான பாடல்களால் போற்றப்படும் தெய்வம்
(1) விஷ்ணு (2) இந்திரன் (3) பூஷன் (4) சூரியன் (5) உஷை

2. வேத இலக்கிய ஆராய்ச்சியில் ஆர்வத்துடன் ஈடுபட்ட மேலைநாட்டவர்
(1) மக்ஸ் மூலர் (2) வில்சன் (3) மக்டொனல் (4) ஜகோபி (5) ஜி. யு. போப்

3. வேள்விக் கிரியைகளுக்குரிய விதிகளைக் கூறும் நூல்
(1) பிராமணம் (2) ஆரணியகம் (3) உபநிடதம் (4) சூத்திரங்கள் (5) பிரம்ம சூத்திரம்

4. உபநிடதக் கருத்துக்களைத் தொகுத்துக் கூறும் நூல்
(1) வேதாந்த சங்கிரகம் (2) வான்மீகி இராமாயணம் (3) மகாபாரதம்
(4) பிரம்ம சூத்திரம் (5) சுக்கிரநீதி

5. ஆத்ம விசாரணை பற்றி யமனுக்கும் நசிகேதனுக்கும் இடையே நடந்த உரையாடலை உள்ளடக்கிய உபநிடதம்
(1) சாந்தோக்கிய உபநிடதம் (2) பிருகதாரண்யக உபநிடதம் (3) தைத்திரிய உபநிடதம்
(4) ஐதரேய உபநிடதம் (5) கடோபநிடதம்

6. இந்து இலக்கியங்களின் வரிசையில் ஐவகை இலட்சணங்களைச் சிறப்பாகக் கொண்டுள்ள நூல்
(1) சங்கீதரத்னாகரம் (2) புராணங்கள் (3) கல்பசூத்திரம்
(4) சுக்கிரநீதி (5) மயமதம்

7. 'ஐந்தாம் வேதம்' என அறிஞர்களால் சிறப்பிக்கப்படும் நூல்
(1) தர்மசாத்திரங்கள் (2) நாட்டியசாஸ்திரம் (3) மகாபாரதம்
(4) சுக்கிரநீதி (5) புராணங்கள்

[பக். 2 ஐப் பார்க்க

8. 'திரயீவித்யா' என்ற பெயரால் வழங்கப்படும் நூல்களைக் குறிக்கும் தொகுதியைத் தெரிவுசெய்க.
(1) உபநிடதம், பிரம்மசூத்திரம், பகவத்கீதை
(2) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா
(3) இருக்கு, யசுர், சாமம்
(4) வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள்
(5) இராமாயணம், மகாபாரதம், சிவரகசியம்

9. இந்துப் பண்பாட்டம்சங்கள் பெருகிக் காணப்பட்ட மகத நாட்டின் தலைநகரம் யாது?
(1) ஒரிசா (2) அயோத்தி (3) கன்னோசி (4) பாடலிபுரம் (5) குருசேத்திரம்

10. நடராஜரை 'ஆடவல்லான்' எனப் போற்றியவர்கள் யார்?
(1) பல்லவ மன்னர்கள்
(2) சோழ மன்னர்கள்
(3) சாளுக்கிய மன்னர்கள்
(4) பாண்டிய மன்னர்கள்
(5) விஜயநகர நாயக்க மன்னர்கள்

11. இந்துமதம் கூறும் அறுவகை பக்தியில் காதலன்-காதலி உறவைக் குறித்து நிற்பது
(1) வாத்ஸல்ய பாவனை
(2) சாந்த பாவனை
(3) காந்த பாவனை
(4) தாஸ்ய பாவனை
(5) மதுர பாவனை

12. மகாபாரத கதாபாத்திரங்களின் பெயர்களைக் கொண்ட மலைதளிகள் அமைந்துள்ள இடம்
(1) சீயமங்கலம்
(2) மாமல்லபுரம்
(3) தஞ்சை
(4) திருச்சிராப்பள்ளி
(5) வல்லம்

13. "நிலை பெறுமா றெண்ணுதியே..." என்ற தேவாரத்தின் மூலம் உணர்த்தப்படும் நெறி யாது?
(1) சரியை நெறி
(2) கிரியை நெறி
(3) யோக நெறி
(4) ஞான நெறி
(5) தியான நெறி

14. கோயிற் கட்டடக்கலையுடன் தொடர்புடைய மூவகை ஆலயங்களுள் 'கேவலாலயம்' என்பது
(1) இறைவனுக்காக மாத்திரம் அமைக்கப்படும் ஆலயமாகும்.
(2) இறைவனுக்கும் தேவிக்கும் அமைக்கப்படும் ஆலயமாகும்.
(3) இறைவனுக்கும் விநாயகருக்கும் அமைக்கப்படும் ஆலயமாகும்.
(4) தேவிக்கும் பரிவார தெய்வங்களுக்கும் அமைக்கப்படும் ஆலயமாகும்.
(5) இறைவனுக்கும் பரிவார தெய்வங்களுக்கும் அமைக்கப்படும் ஆலயமாகும்.

15. 'நமசிவாய' என்ற பஞ்சாட்சர மந்திரம் முதன் முதலில் இடம்பெறுவது,
(1) பகவத்கீதையிலாகும்.
(2) யோகசூத்திரத்திலாகும்.
(3) சதருத்திரியத்திலாகும்.
(4) யோகவாசிஷ்டத்திலாகும்.
(5) பிரம்மசூத்திரத்திலாகும்.

16. யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையினால் வெளியிடப்படும் சைவப் பத்திரிகை எது?
(1) இந்துசாதனம்
(2) கோபுரம்
(3) இந்துநெறி
(4) இந்துதர்மம்
(5) பண்பாடு

17. குரு தத்துவத்தை உணர்த்தும் வகையில் தட்சணாமூர்த்தியின் முன்வலதுகை கொண்டு விளங்கும் முத்திரை
(1) வரத முத்திரை
(2) அபய முத்திரை
(3) சூசி முத்திரை
(4) கடக முத்திரை
(5) சின் முத்திரை

18. ஆச்சிரம தர்மத்தில் குறிப்பிடப்படும் ஐவகைக் கடமைகளுள் 'பூதயக்ஞம்' எனப்படுவது,
(1) சிராத்த சடங்குகளாகும்.
(2) தெய்வங்களுக்குரிய யாக வழிபாடாகும்.
(3) மக்களுக்குச் செய்யப்படும் வழிபாடாகும்.
(4) விருந்தினருக்குச் செய்யப்படும் வழிபாடாகும்.
(5) உயிரினங்களின் பொருட்டு செய்யப்படும் வழிபாடாகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**19.** பெண்களது வளமான வாழ்வு பற்றிக்கூறும் 'ஸ்திரீ கர்மாணி' என்ற மந்திரம் இடம்பெறுவது,
(1) இருக்கு வேதத்திலாகும். (2) யசுர் வேதத்திலாகும். (3) சாம வேதத்திலாகும்.
(4) அதர்வ வேதத்திலாகும். (5) மகாபாரதத்திலாகும்.

**20.** வறுத்த வித்து போன்று ஆணவ மலம் வலி குன்றும் நிலை எவ்வாறு அழைக்கப்படும்?
(1) சத்திநிபாத நிலை (2) இருவினையொப்பு நிலை (3) பெத்த நிலை
(4) திருவருள் நிலை (5) மலபரிபாக நிலை

**21.** ஆன்மாக்களின் 'சுத்தாவத்தை நிலை' என்பது
(1) இருள் நிலை (2) மருள் நிலை (3) அருள் நிலை (4) தியான நிலை (5) யோக நிலை

**22.** 'தர்மபூத ஞானம்' பற்றிக் குறிப்பிட்டவர் யார்?
(1) சங்கரர் (2) இராமானுஜர் (3) மத்துவர் (4) தத்துவராயர் (5) இரமணர்

**23.** தென்கிழக்காசிய நாடுகளில் அகத்தியர் வழிபாடு சிறப்புப் பெற்ற நாடு
(1) கம்போடியா (2) தாய்லாந்து (3) ஜாவா (4) மலேஷியா (5) பர்மா

**24.** 'உபநிடதக் கருத்துக்களை உள்ளடக்கி உருவாக்கபட்ட 'பிரமசூத்திரம்' என்ற நூலின் ஆசிரியர்
(1) பாதராயணர் (2) கௌடபாதர் (3) கோவிந்தர்
(4) சங்கரர் (5) நீலகண்டர்

**25.** 'சைவசித்தாந்தம்' என்ற சொல் முதன்முதலில் இடம்பெறுவது,
(1) திருவாசகத்திலாகும். (2) திருமந்திரத்திலாகும்.
(3) திருவிசைப்பாவிலாகும். (4) திருப்பல்லாண்டிலாகும்.
(5) திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்திலாகும்.

**26.** 'சிற்பக் கலைக்கூடம்' எனப் போற்றப்படும் ஆலயம்
(1) தஞ்சை பிருகதீஸ்வரர் கோயில் (2) ஸ்ரீரங்கம்
(3) மதுரை மீனாட்சியம்மன் கோயில் (4) தர்மராஜரதக் கோயில்
(5) கங்கைகொண்ட சோழேஸ்வரம்

**27.** முருக வழிபாட்டுடன் தொடர்புடைய ஆடல் எது?
(1) பாண்டரங்கம் (2) துணங்கை கூத்து (3) வெறியாடல்
(4) கொடுகொட்டி (5) அல்லியம்

**28.** பொலன்னறுவைக் காலத்தில் ஆதிக்கம் பெற்ற இந்திய மன்னர்கள் யாவர்?
(1) பல்லவர்கள் (2) சோழர்கள் (3) விஜயநகர நாயக்கர்கள்
(4) மராட்டியர்கள் (5) பாண்டியர்கள்

**29.** 'குமார சம்பவம்' என்னும் நூலின் ஆசிரியர் யார்?
(1) காளிதாஸர் (2) பரதர் (3) வராகமிகிரர் (4) ஜயதேவர் (5) பாரவி

**30.** "உலகத்தில் எழுந்த சமய தத்துவங்களில் மேன்மைக்குரியது சைவசித்தாந்தம்" எனக் குறிப்பிட்ட அறிஞர்
(1) மக்கே (2) கமில் சுவலமில் (3) ஆனந்த குமாரசுவாமி
(4) சேர். ஜோன் மார்ஷல் (5) ஜி. யு. போப்

**31.** சதருத்திரியம் அமைந்துள்ள வேதம்
(1) இருக்குவேதம் (2) யசுர்வேதம் (3) சாமவேதம்
(4) அதர்வவேதம் (5) கந்தர்வவேதம்

[பக். 4 ஐப் பார்க்க

**32.** 'சரீரசரீரி பாவம்' என்ற கொள்கையை விளக்கியவர்
(1) இராமானுஜர் (2) மத்துவர் (3) வல்லபர்
(4) நிம்பார்க்கர் (5) ஸ்ரீசைதன்யர்

**33.** வர்ணக் கோட்பாடு பற்றி முதன்முதலாகக் குறிப்பிடும் இருக்கு வேதப் பாடலைக் கொண்டது
(1) புருஷ சூக்தம் (2) நாஸதீய சூக்தம் (3) யம சூக்தம்
(4) பிரமச்சரிய சூக்தம் (5) வருண சூக்தம்

**34.** "பற்றற்ற மனமும் உண்மையான அன்பும் இறைவனை அடையும் வழியாகும்" எனக் குறிப்பிட்ட பெரியார்
(1) சுவாமி விவேகானந்தர் (2) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
(3) காசிவாசி செந்திநாதையர் (4) ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்
(5) அருணாசல தேசிகர்

**35.** மார்கழி மாதத்தில் விசேடமாக ஓதப்படும் புராணம்
(1) பெரியபுராணம் (2) கந்தபுராணம்
(3) திருவாதவூரடிகள் புராணம் (4) திருவிளையாடற் புராணம்
(5) பார்க்கவ புராணம்

● மேல்வரும் பகுதிகளில் தரப்பட்டுள்ள சொற்களில் **இவ்விரண்டு** சொற்கள் குறிப்பிட்ட ஒரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்களுக்குப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>அபிஷேகம் | B<br>கிருஹ்ய சூத்திரம் | C<br>அலங்காரம் | D<br>சித்தன்ன வாசல் | E<br>ஆக்கத்திறன் |
| F<br>தன்வந்திரி | G<br>எல்லோரா | H<br>அழகியல் | I<br>சுஸ்ருதர் | J<br>சிரௌத சூத்திரம் |

**36.** ஆலயக் கிரியைகளோடு தொடர்புடைய சோடி
(1) A, C (2) B, H (3) C, G (4) E, J (5) F, G

**37.** வேதங்களை விளக்கத் துணைபுரியும் நூல்கள் அடங்கிய சோடி
(1) A, J (2) B, J (3) D, F (4) E, H (5) H, J

**38.** வரலாற்றுப் புகழ்பெற்ற ஓவியங்களோடு தொடர்புடைய சோடி
(1) A, I (2) B, H (3) B, G (4) D, G (5) E, H

**39.** இந்துக் கலையனுபவத்தோடு தொடர்புடைய சோடி
(1) A, J (2) B, H (3) B, I (4) D, I (5) E, H

**40.** இந்து மருத்துவத்தோடு தொடர்புடைய சோடி
(1) A, G (2) C, G (3) D, F (4) D, I (5) F, I

[பக். 5 ஐப் பார்க்க

● **41** தொடக்கம் **45** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**41. வான்மீகியின் வடமொழி இராமாயணம்**

(1) தமிழில் கம்பராமாயணம் எனச் சிறப்படைந்தது.
(2) ஏறக்குறைய இரண்டாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டது.
(3) இராமாயணத்தின் அடிப்படைக் கோட்பாடு விஷ்ணுவின் கிருஷ்ண அவதாரத்தோடு தொடர்புடையது.
(4) இராமாயணக் கதையின் மூலம் வட இந்தியக் கலைமரபு தமிழகத்தில் பரவலாயிற்று.
(5) இந்து தர்ம நெறிக்கும் மானுட விழுமியங்களுக்கும் அடிப்படையாக அமைந்தது.

**42. வட இந்திய இந்துப் பண்பாட்டு வளர்ச்சியில் குஷானர் காலம்**

(1) இந்துப்பண்பாடு, காந்தாரக்கலை போன்றவை முதன்மை பெற்றன.
(2) கி. மு. 200 இலிருந்து கி. மு. 165 வரை குஷானர் ஆட்சி இடம்பெற்றது.
(3) கனிஷ்கன் குஷான மன்னர்களுள் தலைசிறந்தவனாக போற்றப்படுகின்றான்.
(4) கனிஷ்கனால் வட இந்தியாவின் மேற்குப் பகுதியில் இந்துப் பண்பாடு பரப்பப்பட்டது.
(5) கட்டடக்கலை, இசைக்கலை ஆகியன இக்காலத்தில் எழுச்சிபெற்றன.

**43. அருணகிரிநாதர்**

(1) முருக வழிபாட்டின் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட இவர் நீண்டகாலம் திருவண்ணாமலையில் வாழ்ந்தார்.
(2) இளமையில் கல்வி அறிவும் சமய நூல்களில் புலமைத்துவமும் பெற்று விளங்கினார்.
(3) முருகப்பெருமானால் நயன தீட்சையும் திருவடி தீட்சையும் அருளப்பெற்றார்.
(4) இவர் வாழ்ந்த காலம் பற்றி அறிவதற்கான சான்றுகள் மிக அரிதாகவேயுள்ளன.
(5) கந்தரனுபூதி, கந்தரலங்காரம், திருப்புகழ் போன்ற நூல்களைப் பாடிய பெருமைக்குரியவர்.

**44. இந்து அறிவியலில் சோதிடக்கலை**

(1) சோதிடம் என்பது நாம் செய்யும் பணிகளுக்குரிய கால விசேடங்களைக் கணித்துக் கூறுவதாகும்.
(2) வேத காலத்தில் சோதிடம் பற்றி அறிவதற்கான நம்பிக்கைகள் மிகவும் அரிதாகக் காணப்பட்டன.
(3) கி.பி. 6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வராகமிகிரர் சோதிடத்தில் சிறந்தவராக விளங்கினார்.
(4) வேதாங்கங்களின் ஆறு அங்கங்களில் ஒன்றாக சோதிடம் அமைந்துள்ளது.
(5) ஆரியபட்டர், பிரமகுப்தர் ஆகியோரது நூல்களிலிருந்து சோதிடம் பற்றிய பல குறிப்புகள் கிடைக்கின்றன.

**45. தற்கால சமூகத்தில் இந்து அறக்கோட்பாடு**

(1) இந்துக்களின் வாழ்வியலில் அறம் சார்ந்த விழுமியங்கள் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன.
(2) இன்றைய நீதிமன்றங்களின் நடவடிக்கைகளில் இந்து சமயச் சட்டங்களும் நீதி முறைகளும் உதவி வருகின்றன.
(3) தர்மசாத்திரக் கருத்துக்கள், தேசவழமைச் சட்டம் ஆகியவற்றின் ஒன்றிணைப்பாக இந்து சட்டவியல் காணப்படுகின்றது.
(4) இந்து தர்மத்தையும் இந்து சட்டத்தையும் பாதுகாப்பதில் தண்டநீதி அவ்வளவாக உதவவில்லை.
(5) மன்னன் மக்களைப் பாதுகாக்காது விட்டால் அராஜகம் நிலவும் என அரச தர்மம் கூறுகின்றது.

[பக். 6 ஐப் பார்க்க

- **46** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுக்களை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்க.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>உதயகிரி | F<br>சிவானந்தலஹரி | K<br>மனு | P<br>சௌந்தர்யலஹரி |
| B<br>பிரம்மச்சரியம் | G<br>போதாயனர் | L<br>பஜகோவிந்தம் | Q<br>தியோகார் |
| C<br>பிருகஸ்பதி | H<br>இந்துதத்துவத்தை ஜனரஞ்சகமாகப் போதித்தமை | M<br>கள்ளாமை | R<br>அன்புவழி |
| D<br>சுப்பிரமணியபுஜங்கம் | I<br>மதுரை | N<br>மக்கள் சேவை | S<br>வாய்மை |
| E<br>சமய சமரசம் | J<br>அவாவறுத்தல் | O<br>தாராசுரம் | T<br>நாரதர் |

**46.** சங்கரர் எழுதிய நூல்களைக் குறிக்கும் தொகுதி
(1) A, G, L, P (2) B, F, M, T (3) C, F, M, T (4) E, I, O, R (5) D, F, L, P

**47.** சமணம் கூறும் மாவிரதங்களோடு தொடர்புடைய தொகுதி
(1) A, F, K, Q (2) B, J, M, S (3) C, H, K, S (4) D, I, O, R (5) E, J, N, R

**48.** சிற்பங்களோடு தொடர்புடைய இடங்களைக் குறிப்பிடும் தொகுதி
(1) A, I, O, Q (2) B, G, K, S (3) C, F, M, T (4) D, J, O, R (5) E, H, L, R

**49.** ஸ்மிருதி ஆசிரியர்களுடன் தொடர்புடைய தொகுதி
(1) A, J, O, R (2) B, F, M, T (3) C, G, K, T (4) D, I, N, R (5) E, I, O, Q

**50.** ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் மக்களுடைய வாழ்வு வளம்பெற வழங்கிய உபதேசங்களைக் கொண்ட தொகுதி
(1) A, H, K, P (2) C, F, M, T (3) D, G, N, T (4) E, H, N, R (5) B, F, M, S

* * *

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

හින්දු ශිෂ්ටාචාරය II
இந்து நாகரிகம் II
Hindu Civilization II

46 T II

06.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

✻ **பகுதி I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் **பகுதி II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

✻ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** இருக்கு வேதம் போற்றும் சமயநெறியில் மேல்வரும் தெய்வங்கள் பெறும் முக்கியத்துவத்தை விவரிக்குக.

(அ) இந்திரன்

(ஆ) வருணன்

(இ) அக்கினி

**2.** சிந்துவெளி நாகரிக காலத்தில் நிலவிய சமயம் இந்து சமயச் சார்புடையது என்பதனை மேல்வரும் காரணிகளின் அடிப்படையில் ஆராய்க.

(அ) சிந்துவெளி நாகரிக காலம்

(ஆ) மக்களின் சமய நம்பிக்கைகள்

(இ) கலைகள்

**3.** பத்தொன்பதாம் நூற்றாண்டில் சைவசமயத்தை வளம் பெறச்செய்வதில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் ஆற்றிய பணிகளை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.

(அ) சமயப்பணி

(ஆ) நூற்பணி

(இ) சமூகப்பணி

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

4. இந்துப் பண்பாட்டில் குப்தர்காலம் பெறும் முக்கியத்துவத்தை மேல்வரும் விடயங்களை அடிப்படையாகக் கொண்டு ஆராய்க.

(அ) சமயநிலை

(ஆ) கலை வளர்ச்சி

(இ) இலக்கிய வளர்ச்சி

5. இந்துக்களது வாழ்வியலை மேம்படுத்துவதில் திருக்குறள் எடுத்துக்காட்டும் வழிமுறைகளை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.

(அ) தனிமனித ஒழுக்க விழுமியங்கள்

(ஆ) இல்லறவியல்

(இ) கல்வி

6. இந்து சமய நெறிகளுள் வைணவ சமயநெறியின் சிறப்பம்சங்களை மேல்வரும் காரணிகளை கருத்திற்கொண்டு விவரிக்குக.

(அ) காலந்தோறும் வைணவம்

(ஆ) வழிபாட்டு முறைகள்

(இ) அவதாரச்சிறப்பு

7. வேதாந்த தத்துவ வளர்ச்சியில் மத்துவரின் துவைத வேதாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை விளக்குக.

8. மேல்வருவனவற்றுள் எவையேனும் நான்கிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.

(அ) மகாபாரதம்

(ஆ) நடராஜர் வடிவம்

(இ) தாயுமானசுவாமிகள்

(ஈ) உபநிடதங்களில் அறம்

(உ) நல்லூர் கந்தசுவாமி கோயில்

(ஊ) மேற்குலக நாடுகளில் இந்துப்பண்பாடு

* * *